# ஆசிரிய நிகண்டு

## பாகம் 2





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 259

# ஆசிரிய நிகண்டு

பதிப்பாசிரியர்

புலவர் வீ. சொக்கலிங்கம்,

தமிழ்த்துறை

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்,**

தஞ்சாவூர்.

2008 ] [விலை: ரூ. 40-00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : ஆசிரிய நிகண்டு (இரண்டாம்பாகம்) |
| பதிப்பாசிரியர் | : புலவர் வீ. சொக்கலிங்கம் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 259 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2008 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 82 |
| படிகள் | : 250 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : நிகண்டு |
| விலை | : ரூ.-40 |

# வெளியீட்டாளர் முகவுரை

(ஆசிரிய நிகண்டு - இரண்டாம் பகுதி)

நிகண்டு என்பது இச்சொற்கு இதுவே பொருளென்று சொற்கும் பொருட்கும் உள்ள ஆற்றலாகிய நியமனம் அறிவிக்கும் கருவி நூல். இது இந்திய மொழிகளில் சொற்பொருள் விளக்கும் துறை நூல்களைக் குறிக்கும் பொதுச்சொல்லாக வழங்கப்படுகின்றது. எனினும் தமிழைப் பொறுத்தவரை, இது யாப்பு-வழி பட்டுச் சொற்பொருள் விளக்கும் துறை நூலைக் குறித்தற்கு ஆளப்பெறுகின்றது.

நிகண்டு என்னும் வடசொல்லுக்குக் கூட்டம் அல்லது தொகுதி என்று பொருள். நிகண்டு நூலின்கண் சொற்கள் கூட்டமாக, தொகுதியாக அமைக்கப்பட்டுப் பொருள் விளக்கப்படுவதால் நிகண்டு என்னும் பெயர்பெற்றது.

புராணம், பிரபந்தம் முதலிய பெயர்களைப்போல் நிகண்டு என்னும் வடமொழிப் பெயர் தமிழ் உலகில் பெருக வழங்கி நிலைபெற்றுவிட்டது. நிகண்டு என்பதனைத் தமிழ்ச்சொல் எனக்கொள்வாரும் உளர்.

புலவர்களுக்கும், இலக்கியப் பயிற்சியில் ஈடுபட்டவர்களுக்கும் பண்டைக்கால நூல்களைப் படித்துச் சுவைப்பதற்கு உதவும் கருவி நூல்களாகவும், புதுவதாக இலக்கியம் படைக்க உறுதுணை நூல்களாகவும் நிகண்டுகள் தோன்றின என்று கொள்ளலாம். சொல்லுக்கு இரு பெரும் இயல்புகள் உள்ளன. அவை பொருண்மை, சொன்மை என்பன. இதனைத் தொல்காப்பியர், .பொருண்மை தெரிலும் சொன்மை தெரிதலும் சொல்லின் ஆகும் என்மனார் புலவர். எனக் குறிப்பர். பொருண்மை,

சொன்மை ஆகிய இவ்விரு சொற்கூறுகளைத் தெளிந்தால் அன்றிச் சொற்களையோ மொழியையே உணர்தல் இயலாது. எனவேதான் பொருண்மை அறிவு கருதி முதலில் நிகண்டுகளையும் சொன்மை அறிவு கருதிப் பின்னர் இலக்கணங்களையும் பயில்வது பண்டு தமிழகத்தில மரபாக இருந்து வந்தது. எனவே நிகண்டுகளின் தோற்றம் அக்காலத்தின் இன்றியமையாத் தேவையாக இருந்தது.

இந்த வரிசையில் ஆசிரிய நிகண்டு என்பது காலத்தால் பிற்பட்டது என்றாலும் கருத்தாழத்தால் முற்பட்டது என்பதில் ஐயமில்லை. அரிய ஏடுகளை எல்லாம் உரிய முறையில் தொகுத்துப் பாதுகாத்து வருகின்ற சரசுவதி மகால் நூலகம், இப்பொழுது இதன் பிற்பகுதியை உங்கள் சிந்தனைக்கு விருந்தாக வழங்கியுள்ளது.

இதன் பதிப்பாசிரியர் புலவர். திரு.வீ. சொக்கலிங்கம் ஒரு பதிப்பாசிரியராக மட்டுமல்லாது கோவை மாவட்டத்தின் பேரூர், போளுவாம்பட்டி முதலிய தொலை தூர ஊர்களுக்கும் அலைந்து திரிந்து சுவடிகளைத் தொகுத்து வந்த தொகுப்பாசிரியராகவும் விளங்கி நம் போற்றுதலுக் குரியோராய்ப் புகழ்பெறுகின்றார்.

இன்னொரு வகையிலும் இந்நற்றமிழ்ப் புலவரைத் தொகுப்பாசிரியர் என்று அழைப்பது சாலவும் பொருந்தும். ஆசிரிய நிகண்டுடன் திவாகரம், பிங்கலம் முதலிய பிற நிகண்டுகள் பலவற்றிலிருந்தும் புலவர் ஒப்புமைப் பகுதிகளைச் செப்பமுற எடுத்து இணைத்துத் தந்துள்ளார். சுருங்கச் சொன்னால் திருக்குறள் உரைகள் பலவற்றின் தொகுப்பினைத் திருக்குறள் உரைவளம் என்பது போல, நிகண்டுகள் பலவற்றின் நிறைவான தொகுப்பாம் இதனை .நிகண்டு வளம். என்றே நாம் அழைத்து மகிழலாம். வளமான தமிழ்த்தாய்க்கு இன்னொரு வளம் சேர்த்த புலவரை நெஞ்சார வாழ்த்துவோம்.

இந்நூல் தற்போது இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது. இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) ஆகிய திரு.சாமி. சிவஞானம்,எம்.ஏ., அவர்களுக்கும், இந்நூல் கணினியில் வெளிவர, கணினி பிரிவில் பணிபுரிந்த அனைவருக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

***சா. விஜயராஜ் குமார்*, இ. ஆ. ப.,**
**மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும்**
**இயக்குநர்,**
**சரசுவதி மகால் நூலகம்.**

தஞ்சாவூர்,
7-2-2008



# ஆசிரிய நிகண்டு

## காப்பு

ஏரா. சிரியநிகண் டென்னுமீ ரைந்தொன்று
சீரார் தொகுதியதாச் செப்புதற்கே - ஓராரைச்
சேரானைச் சேர்ந்தாரைச் சேரும் வினையகற்றுங்
காரானை மாமுகன்றாள் காப்பு.

## பதம் பிரித்தது

ஏர் ஆசிரிய நிகண்டு என்னும் ஈரைந்து ஒன்று
சீர் ஆர் தொகுதி அதாச் செப்புதற்கே - ஓராரைச்
சேரானைச் சேர்ந்தாரைச் சேரும் வினை அகற்றும்
கார் ஆனை மாமுகன் தாள் காப்பு.

உ

தமிழ் வாழ்க

# முன்னுரை

## தோற்றுவாய்

ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங்(கு)
ஈரிருவர்க்கு இரங்கி நின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர்
நெறியளித்தோன் நின்ற கோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோதும் ஓசை கேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்
பொருள்சொல்லும் மிழலை யாமே !

கல்லாலின்புடை யமர்ந்து நான்மறை, ஆறு அங்கம் முதலானவற்றை, வல்லார்கள் நால்வருக்கு இருந்து காட்டிச் சொல்லாமற் சொன்ன தமிழ்க்கடவுள், தமிழ் மீதுள்ள எல்லையற்ற அன்பினால், சங்கப் புலவர்களில் தானும் ஒருவனாக இருந்து, இலக்கண வரம்புடைய தமிழை ஆய்ந்தான் எனில் தமிழின் பெருமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ? வேண்டற்பாலது அன்று. கொல்லேற்றுப் பாகர், குடமுனிக்கு அருளிச்செய்த தென்மொழியாம் தேன்தமிழ் மொழியினைப் பயிலப்புகுவார். முதற்கண் நிகண்டு நூல்களை ஐயம் திரிபறக் கற்று, பின்னரே இலக்கண இலக்கிய நூல்களைக் கற்றுப் புலமைத் திறம் பெறுவர். அண்மைக்காலம் வரையிலும் கூட நம் முன்னோர்கள், நிகண்டு, அகராதி கற்று, அதன் பின்னரே இலக்கண இலக்கியம் பயின்றனர், படைத்தனர் என்பது அவர்தம் நூல் திறத்தால் அறியக்கிடைக்கின்றது.

'முதலில் நிகண்டு கற்றுப் பின்னர் இலக்கியம் கற்று, அதன் பின்னரே இலக்கணம் பயிலவேண்டும்' என்று

பண்டைத்தமிழ்க் கணக்காயர் கைக்கொண்டிருந்தனர். 'நிகண்டு' பேசுதல் எனில் எல்லாம் தெரிந்து பேசுதல் என்பது பொருள். எவ்வாற்றானும் தமிழ் மொழிக்கு முதன்மையாகக் கற்க வேண்டிய கருவி நூல் நிகண்டு என்பதொன்றாகும்.

## நிகண்டு

நிகண்டு என்ற சொல்லுக்குப் பொருள் தொகுதி உண்மை, கூட்டம் என வழங்கும். நிகழ்ந்தவை என்ற தமிழ்ச்சொல்லின் திரிபே நிகண்டு எனலாம். உலகில் உண்மையாக நிகழ்ந்தவைகளைத் தொகுத்து, அதற்கு நிகழ்ந்தவை எனப்பெயரிட்டு, அது, நாளடைவில் நிகண்டு என மருவிற்றென்பதற்கிடமுண்டு, ஆனால் இது சொற்களின் பொருள், பொருட்கள் ஆகியவற்றைக் கூறுகின்றது.

நிகண்டு என்பது ஒரு பொருட் பலசொற் றொகுதியையும் பாவிலமைத்துக் கூறும் நூல் என்றும், வைதிகச் சொற்களின் ஒரு பொருட் பல சொற் றொகுதியையும் உணர்த்தும் நூல் என்றும் தமிழ் லெக்சிகன் கூறுகின்றது.

வடமொழியில் வேதத்திற்கு அங்கமாய வைதிகச் சொற்களின் பொருள்களை ஆராய்வதற்கு, 'நிருக்தம்' என்று பெயர். இந்த நிருக்தத்தின் ஒரு பகுதி நிகண்டு என்று பெயர். ஆகவே வைதிகச் சொற்களை உணர்த்தும் கருவி நூலுக்கு மட்டும் நிகண்டு என்று சிறப்பாக வழங்கப்பட்டது. நாளடைவில் சொற்பொருள் உணர்த்தும் நூல்களுக்கெல்லாம் இப்பெயர் வழங்கத் தலைப்படலாயிற்று.

நிகண்டு என்பது, இடுகுறியாற் பெயர் பெற்றது என்கின்றது இறையனார் களவியலுரை. நன்னூல் உரையாசிரியர் மயிலைநாதரும் இதனைக் கையாண்டுள்ளார். நிகண்டு என்னும் வடமொழிச் சப்தம், தமிழாகி, தமிழுலகில் பெருக வழங்கி நிலைபெற்றுவிட்டது என்பர் ஒரு சாரார்.

## உரிச்சொற்பனுவல்

நம் முன்னோர்கள், நிகண்டு நூலை, உரிச்சொல் என்றும் உரிச்சொற் பனுவல் என்றும் இயம்பி வந்தனர்.

ஒப்புயர்வற்று விளங்கும் நம் தெய்வத்தமிழ் நூல்களுள் தலைசிறந்ததும், தொன்மையுடையதுமானது, ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியரின், தொல்காப்பியம் ஆகும். அந்நூலுள் சொல்லதிகாரத்து, உரிச்சொல்லியலில், உரிச்சொல்லின் பொதுவிலக்கணங் கூறுங்கால்

"உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை... ... ..."
எனத்தொடங்கி

"ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும்
பலசொல் லொருபொருட் குரிமை தோன்றினும்"
எனக்கூறி

"எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்"
என முடிக்கின்றார். இயலுள்:

"மழவுங் குழவு மிளமைப் பொருள்" என்றும்,

"நொசிவு நுழைவு நுணங்கு நுண்மை" என்றும்

"கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்க மிகுதி சிறப்பே
மெய்படத் தோன்றும் பொருட்டா கும்மே!" என்றும்

கூறியிருத்தலின், பின்னர் எழுந்த நிகண்டு நூல்களுக்கு முன்னரே உரிச்சொல் என்றபெயரால் நிகண்டு இருந்துளது என்பது புலனாகின்றது.

எல்லையில் புகழ் தொல்காப்பியத்தின் பின்னர், பிங்கல முனிவருக்குப் பிந்திய பன்னருஞ் சிறப்பின் பவணந்தி முனிவர் தாமியற்றிய நன்னூலில், உரிச் சொல்லியல் 459-ம் சூத்திரத்து,

"இன்ன தின்னுழி யின்னண மியலும்
என்றிசை நூலும் குணிகுணப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோ ருரிச்சொல்லி னயந்தனர் கொளலே"

என்று கூறியுள்ளார். இதற்கு உரை யாத்த மயிலைநாதரும், மேற்குறிப்பிட்ட தொடருக்கு அவை பிங்கல முதலான புலவர்களாற் சொல்லப்பட்ட உரிச்சொற் பனுவல்களுள் விரும்பி அறிந்து கொள்க என்று கூறியுள்ளார். இதனால் பண்டை நிகண்டு நூல்களுக்கு உரிச்சொற் பனுவல் என்று பெயர் வழங்கி வந்தது தெரியவருகின்றது.

மேலும், நிகண்டு நூல்களுள், கயாதர நிகண்டு என்றொரு நூலுண்டு. அதனை இயற்றிய கயாதரமுனிவர் தமது பாயிரத்து, இரண்டாம் கட்டளைக் கலித்துறையில்,

"பேதையர் பித்தரறியாத பாலர்சொற் பேதங் கொள்ளார்
ஓதினுங் குற்றந் தெரியார் பெரியவ ரோங்கிடப
கேதனன் பற்று மறவாத தேவைக் கயாதரன்றொல்
வேதியன் சொற்ற வுரிச்சொற் பனுவலு மேம்படுமே"!(2)

என்று கூறியுள்ளார்.

'உரிச்சொற் பனுவல்' என்ற சொல் கயாதரராற் கையாளப் பட்டுள்ளது. மேலும், இவரது 4வது செய்யுளில் 2-ம் வரியில், 'உரிச்சொல் கிளர் பனுவல்' என்றும் இறுதிப்பாடல் 3-ம் வரியில், 'உரிச்சொல் பனுவல் விரித்துரைத்தான்' என்றும் காணப்படுகின்றன. எனவே கயாதரர், நிகண்டு நூலை, உரிச்சொற் பனுவல் என்றே குறிப்பிடுகின்றார்.

'சூடாமணி உள்ளமுடையான்' என்றொரு சோதிட நூலுண்டு, இதனை இயற்றிய, பாண்டமங்கை திருக் கோட்டியூர் நம்பிகள் தம்நூலில், நட்சத்திரங்களின் பெயர்களைச் செய்யுளாற் பாடியுள்ளார். அதற்கு, 'நாளுரிச்சொல்' என்றும், அதற்கு அடுத்தப் பகுதிக்கு, 'கிழமை உரிச்சொல்' என்றும் கூறியுள்ளார். இதனாலும், நிகண்டு நூலை உரிச்சொல் என்ற பெயராலேயே புலவர்கள் வழங்கினர் என்று தெரிகின்றது. இவர்தாம் இயற்றிய

நாளுரிச்சொல் பகுதியிலுள்ள நட்சத்திரங்களின் பெயர்கள், பெரும்பான்மை பிற நிகண்டு நூல்களை ஒத்திருக்கின்றன.

முன்னர் கூறியாங்கு இலக்கண நூல்களுள் தொன்மையானது "தொல்காப்பியம்" என்பது யாவரும் அறிந்த உண்மை. அங்ஙனமாயின், தொல்காப்பியர் முதலான முதுபெரும் புலவர்கள் முதன் முதலில், நிகண்டு கற்றிருத்தல் வேண்டும். அந்நிகண்டின் பெயர் காணக்கிடைக்கவில்லை. அகத்தியம் முதலான நூல்கள் கடல் கோள்களால் அழிந்துபட்ட காலத்து, அற்றைநாள் நிலவிய 'ஆதி நிகண்டும்' அழிந்துபட்டிருத்தல் வேண்டும். ஆகவே, 'இலக்கணங்களுள் பழமையானது தொல்காப்பியம்' என்பது போலவே, நிகண்டுகளுள் பழமையானது 'தொல்காப்பியம்' எனில் மிகையாகாது.

முற்கூறியாங்கு, சொற்பனுவல் எனும் நிகண்டு நூல் தொல்காப்பிய உரிச்சொல்லியலில் காணக்கிடைக்கின்றது. தொல்காப்பியத்தின் பின்னர், நிகண்டு என்னும் வடசொல் உரிச்சொற் பனுவல்களோடு சேர்ந்து, தனித்தும் தொடர்ந்தும் வழங்கலாயிற்று "பிங்கல நிகண்டு", "உரிச்சொல் நிகண்டு" என்பன அவற்றிற்குச் சான்றாகும். அதன்பின், நிகண்டு என்ற சொல்லே தமிழில் நிலைபெற்றுவிட்டது போலும்.

## நிகண்டு நூல்கள்

'நிகண்டு' என்னும் பெயரேற்ற நூல்களுள் தொன்மையானது, 'சேந்தன் திவாகரம்' எனலாம். கி.பி. எட்டாம் நூற்றாண்டில் 'அம்பர்' என்னும் ஊரின் தலைவனான, சேந்தன் என்பானின் வேண்டுகோட்கிணங்க திவாகர முனிவரால் பாடப்பட்டதாகும். பின்னர் எழுந்தது, 'பிங்கல முனிவர்' இயற்றிய 'பிங்கலந்தை' எனும் பிங்கல நிகண்டு. அதன் பின்னர், மண்டல புருடரால் இயற்றப்பட்டது. சூடாமணி நிகண்டு. அதன் பிறகு காங்கேயர் என்பார் உரிச்சொல் நிகண்டு என்ற நூலை இயற்றினார். அதன் பின்னரே, கயாதரரால் பாடப்பட்டது கயாதர நிகண்டு. இப்படியாக எழுந்த நூல்கள் பல.

## இதுவரை கிடைக்கப்பெற்ற நிகண்டு நூல்களின் அகரமுதலி

| நூற்பெயர் | ஆசிரியர் |
|---|---|
| அகராதி நிகண்டு | சிதம்பர இரேவணசித்தர் |
| அகராதி நிகண்டு (ஒரு சொல் பலபொருட்டொகுதி) | ? |
| அகாரதி நிகண்டு | (தாயவலம் தீர்த்த கவிராயர்) |
| அபிதானத் தனிச் செய்யுள் நிகண்டு | கோபாலசாமி நாயகர் |
| அபிதான மணிமாலை நிகண்டு | திருச்சிற்றம்பலம் இன்னமுதம்பிள்ளை |
| அரும்பொருள் விளக்க நிகண்டு | அருமருந்து தேசிகர் |
| ஆசிரியநிகண்டு | ஆண்டிப்புலவர் |
| ஆரிய நிகண்டு | ? |
| உசித சூடாமணி நிகண்டு | சிதம்பரம்பிள்ளை |
| உசித சூடாமணி நிகண்டு | திருநெல்வேலி சிதம்பரக் கவிராயர் |
| உரிச்சொல் நிகண்டு | காங்கேயர் |
| ஏம தத்துவம் என்னும் பஞ்சகாவிய நிகண்டு | அகத்தியர் |
| ஔவை நிகண்டு [1] | ஔவையார் |
| கயாதர நிகண்டு | காயதரர் |
| கைலாச நிகண்டு | ? |
| சிந்தாமணி நிகண்டு | வ. வைத்தியலிங்கம்பிள்ளை |
| சூடாமணி உள்ளமுடையான் (சோதிடம்) | பாண்டமங்கை திருக்கோட்டி நம்பி |
| சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் |
| சேந்தன் திவாகர நிகண்டு | திவாகர முனிவர் |
| தன்வந்திரி நிகண்டு (மருத்துவம்) | தன்வந்தரி |

1. இது பிடக நிகண்டின் வேறாயதா என்பது ஆராயற்பாலது.

| | |
|---|---|
| தொகை அகராதி (நிகண்டு) | ? |
| தொகை நிகண்டு | சாமிக்கவிராயர் |
| தொகைப்பொருள் நிகண்டு | கிருட்டினசாமி சேனை நாட்டார் |
| நட்சத்திர நிகண்டு (சோதிடம்) | ? |
| நவமணிக்காரிகை நிகண்டு | அரசஞ்சண்முகனார் |
| நாநார்த்த தீபிகை நிகண்டு | முத்துசாமி பிள்ளை |
| நாமதீப நிகண்டு | சிவசுப்பிரமணியக்கவியராயர் |
| நிகண்டு | (சென்னை ஓரியண்டல் சுவடி நிலையப்பட்டியல் எண்.311) |
| நிகண்டு ஆயிரத்திருநூறு (மருத்துவம்) | போகமுனிவர் |
| பல்பொருட் சூடாமணி (நிகண்டு) | ஈசுர பாரதியார் |
| பாரதி தீப நிகண்டு | தென்கடம்பைத் திருவேங்கடபாரதி |
| பிங்கல நிகண்டு (அ) பிங்கலந்தை | பிங்கல முனிவர் |
| பிடக நிகண்டு[1] | ஔவையார் |
| பொதிகை நிகண்டு | சாமிநாதக் கவிராசர் |
| பொருட்டொகை நிகண்டு | வே. சுப்பிரமணிய பாரதி |
| பொருள்விளக்க நிகண்டு | ஆனைகட்டி முனிசாமி முதலியார் |
| போகர் நிகண்டு (மருத்துவம்) | போக முனிவர் |
| மஞ்சிகன் ஐந்திணைச் சிறு நிகண்டு | மாகறல் கார்த்திகேய முதலியார் |
| வடமலை நிகண்டு | ஈசுர பாரதி |
| வாத நிகண்டு (வைத்தியம்) | சட்டைமுனி |
| விரிவு நிகண்டு | வீரவநல்லூர் நா. அருணாசல நாவலர் |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | வேதகிரியார் |

1. தமிழ்ப்புலவர் அகராதியில் கண்டது.

இன்னும் பல இருக்கக்கூடும். அவற்றுள் சில மறைந்தும் சிதைந்தும் அழிந்தும் போயின. எஞ்சியவைகளுள் ஒருசிலவற்றின் குறிப்புகளை நினைவிற் கொள்வாம்.

## சேந்தன் திவாகரம்

நிகண்டுகளுள் காலத்தால் முற்பட்டது சேந்தன் திவாகர நிகண்டு ஆகும். சூத்திர யாப்பான் அமைந்த பன்னிரண்டு தொகுதிகளையுடையது. இந்நூலினைக் கி. பி. ஆறாம் நூற்றாண்டினதென்பார் காலஞ்சென்ற ஆராய்ச்சிப் பெரும்புலவர், திருவாளர் ப. உலகநாதப்பிள்ளை அவர்கள். சோழநாட்டின்கண்ணுள்ள பொன்விளைக்கும் காவிரிக் கரையில் உள்ள, 'அம்பர்' என்னும் நகரை ஆண்ட சிற்றரசன் 'சேந்தன்' என்பார். வடமொழி, தென்மொழிகளில் வல்ல புலவர். பெருங்கொடை வள்ளல். ஔவையாரால் பாடப்பெற்றவர். 'சம்பாதி' என்னும் பூம்புகார் தெய்வத்தின் மீது ஒரு அந்தாதி பாடியுள்ளார். கோதண்டம், காண்டீபம், வேல் என்பனவற்றைப் புகழ்ந்து பாடியவர். இவற்றினை, திவாகரத்தின் அகச்சான்றாக ஒவ்வொரு தொகுதியின் ஈற்றில் காணப்படும் சூத்திரங்களாலறியலாம்.

சேந்தன் என்பாரைக் 'கல்லாடர்' பாடியதாக ஒரு செய்யுள் புறநானூற்றில் காணப்படுகின்றது. அந்த சேந்தனும், திவாகரச் சேந்தனும் வேறு என்பது உய்த்துணரத்தக்கது. இச்சேந்தனது வேண்டுகோட்கிணங்கி, திவாகரர் எனும் முனிவரால் பாடப்பட்டமையின் செய்தவர், செய்வித்தவர் ஆகிய இருவர் பெயரும் ஒருங்கே அமைய, இதற்குச் சேந்தன் திவாகரம் எனப்பெயர் வழங்கலாயிற்று.

## பிங்கல நிகண்டு

பிங்கல முனிவராற் செய்யப்பட்டது பிங்கல நிகண்டு. இது, வான்வகை முதலாக ஒருசொற் பலபொருள் ஈறாகப் பத்து வகைகளையுடையது. சூத்திர யாப்பான் அமைந்தது. பிங்கல முனிவர் சோழநாட்டில் பிறந்தவர். இல்லறத்தினின்றும் துறவு பூண்டவர். இவரைத் திவாகர முனிவரது மகன் என்பர்.

எனவே இது திவாகரத்தை அடுத்த கால எல்லையினை யுடையது. இதற்குப் பிங்கலத்தை என மற்றொரு பெயரும் உண்டு.

"பிங்கலந்தை தன்னில் ஒருங்குள பொருளு
மோர்ந்திட் டுரைத்தனன்" -எனச் சூடாமணி நிகண்டும்,

"பிங்கல முதலா நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே".

என நன்னூலும் இந்நூலைக் குறிப்பிடுதலின், சூடாமணி நிகண்டிற்கும், நன்னூலுக்கும் காலத்தால் முற்பட்டது ஆகும். எனவே, பிங்கல நிகண்டு, திவாகரத்திற்கும் சூடாமணி நிகண்டுக்கும் இடைப்பட்ட காலத்திற் செய்யப்பட்டது என்று கொள்ளத்தக்கது.

## சூடாமணி நிகண்டு

இதனை ஆக்கியோர் மண்டல புருடர் ஆவர். இவர், தொண்டை நாட்டில் குன்றத்தூரில், சமண மரபிற் பிறந்தவர். இவரை, 'வீரை மண்டல புருடர்' என்றழைப்பர். இவரது ஆசிரியர், 'திருநறுங் குன்றை குணபத்திரர்' ஆவர். இவர், இந்நிகண்டின் செயல் பற்றிய பெயர்த்தொகுதி, பத்தாவது செய்யுளில், கிருஷ்ணதேவராயரது கொடைத்திறனைப் புகழ்ந்து பாடியுள்ளதால், இந்நூல் கிருஷ்ணதேவராயர் காலத்ததாகும்.

கிருஷ்ணதேவராயர், இராட்டிரகூடத்தரசராகிய இரண்டாவது கிருஷ்ணதேவராயர். இவர் கி.பி.874 முதல் 914 வரை ஆட்சிபுரிந்தவர். எனவே சூடாமணி நிகண்டின் காலம் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கம் எனக்கொள்ளத்தக்கது. பதினோராம் நூற்றாண்டின் தொடக்கம் என்பாருமுளர்.

இது, பன்னிரண்டு தொகுதிகளையுடையது. திவாகரம், பிங்கலம் ஆகிய இரண்டையும் ஆய்ந்து, விருத்த யாப்பின் இயற்றப்பட்டது. இந்நூலுக்கு ஆசிரியர் இட்டபெயர் 'நிகண்டு சூடாமணி' என்பார், திரு. மு. இராகவய்யங்கார் அவர்கள்.

## உரிச்சொல் நிகண்டு

இம்முடிப் பட்டம் பெற்ற காங்கேயரால் உரிச்சொல் நிகண்டு இயற்றப்பட்டது. இவர், தொண்டை மண்டலத்தில் செங்குந்தர் மரபில் பிறந்தவர் என்பர். சிலர், கொங்கு நாட்டவர் என்பர். இந்நூலில் வணக்கத்தைக் குறிக்கும் சொற்களில், சலாம் எனும் மகம்மதியச்சொல் காணப்படுதலின், மகம்மதியர் தென்னாட்டு ஆட்சியை கைக்கொண்ட காலத்திற்குப்பின் இந்நூல் இயற்றியிருத்தல் வேண்டும் எனத்தோன்றுகின்றது.

இவர், பதினான்காம் நூற்றாண்டினர். சிலர் கி.பி. 1600 என்பர். பதினேழாம் நூற்றாண்டென்று தமிழ்ப்புலவர் அகராதி கூறும். இந்நூல், பனிரெண்டு தொகுதிகளை யுடையது. வெண்பாவான் அமைந்தது.

## கயாதர நிகண்டு

'தேவை' எனப்படும் திருவிராமேச்சுரத்தில், அந்தணர் மரபில், காசியப கோத்திரத்தைச் சேர்ந்த சோமேசர் என்பாரின் தவப்புதல்வராக விளங்கியவர் கயாதர முனிவர். இவர் சிறந்த சிவபக்தர். இவரால், பதினைந்தாம் நூற்றாண்டில் செய்யப்பட்டது 'கயாதர நிகண்டு'.

இந்நூல், கயாகரம் எனவும் வழங்கப்படும். இது, கட்டளைக் கலித்துறையான் அமைந்தது. பதினோறு தொகுதிகளையும் ஐந்நூற்றறுபத்தாறு செய்யுட்களையும் கொண்டது. அந்தாதித் தொடையினைக்கொண்டு அழகுற மிளிர்வது.

இதுவரை, மேற்சொல்லிய, திவாகர, பிங்கல, முதலான நிகண்டுகளெல்லாம் சூத்திர யாப்பானும், விருத்த யாப்பானும் வெண்பாவானும், கட்டளைக் கலித்துறை யானும் அமைந்திருத்தலின், இத்துணையும் நெட்டுருச் செய்து கற்பது பிற்காலத்தவருக்குக் கடினமாயிருந்த காரணத்தால், எளிதில் கற்கவேண்டி, அகரவரிசை முறை தோன்றியது.

## அகராதி நிகண்டு

அகரவரிசையில் எழுந்த அகராதி நிகண்டு, சொற்களை எளிதில் கண்டு, பொருள்கொள்வான் வேண்டி அமைக்கப் பட்டது. முதலெழுத்து மட்டும் அகரமுதலி முறையில் எழுந்த முதல் நிகண்டு நூல் இதுவேயாகும்.

இதனை இயற்றியவர், பேரளத்தில் பிறந்து, புலியூர் என்னும் சிதம்பரத்தில் வாழ்ந்த, இரேவணசித்தர் ஆவர். இந்நூல், கி.பி. 1594-ல் செய்யப்பட்டதாகத் தெரிவதால் இது பதினாறாம் நூற்றாண்டதாகும்.

## பொதிகை நிகண்டு

பொதிகை நிகண்டு, வீரமாமுனிவரின் சதுரகராதிக்குப் பின் அகரவரிசையில் எழுந்தது. இது, அகரவரிசையினையும் எதுகை வரிசையினையும் கொண்டுளதாதலின் அகராதியோடு ஒப்ப விளங்கலாயிற்று. இது, சுவாமிநாதக் கவிராயரால் செய்யப்பட்டது.

## பாரதி தீப நிகண்டு

தென்கடப்பையில், அந்தணர் மரபில் தோன்றிய, பரமானந்த பாரதி என்றழைக்கப்பட்ட திருவேங்கட பாரதியால், பதினேழாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. துறவினை மேற்கொண்ட இவரது நூல், கயாதரம் போல கட்டளைக் கலித்துறையான் அமைந்தது. பன்னிரண்டு பிரிவுகளை உடையது.

## ஆசிரிய நிகண்டு

ஆசிரிய நிகண்டின் ஆசிரியர் ஆண்டிப்புலவர் ஆவர். ஆசிரிய விருத்தத்தாலானதால் ஆசிரிய நிகண்டு எனப்பெயர் பெற்றது. இது பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்டது.

பல்வேறு சிறப்பியல்புகளைக் கொண்ட நிகண்டு நூல்களுள், மிகவும் எளிதில் பயிலக்கூடியது ஆசிரிய நிகண்டு. பதினொரு தொகுதிகளையுடையது. பன்னிருசீர் கழிநெடிலாசிரிய விருத்தத்தாற் பாடப்பட்டது.

## ஆசிரியர் வரலாறு

தொண்டை வளநாட்டில் செஞ்சியை அடுத்த ஊற்றங்கால் என்னும் ஊரில் பிறந்த ஆண்டிப்புலவர் இதன் ஆசிரியராவர். பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர். இவரது தந்தையார் பெயர் பாவாடை வாத்தியார் என்பது பாயிரத்தால் விளங்கும்[1] இவரையே, பாவாடை வாத்தியார் என்பாருமுளர்.

ஊற்றங்காலெனும் மாநகர்க்கதிபன் என்று காணப்படுதலின், இவரோ, இவரது தந்தையோ சிற்றரசனாக இருந்திருக்கலாம் என்று எண்ண இடமுளது. இவரது ஆசிரியர் ஞானப்பிரகாசர் ஆவர். இவர், ஆசிரிய நிகண்டேயன்றி, உரையறி நன்னூல் முறைமை என்ற நூலையும் செய்துள்ளார். இது நன்னூலுக்கு உரையா என்பது ஆராயற்பாலது.

இவர், தாமியற்றிய இந்நூலுக்கு இட்டபெயர் ஆசிரிய நிகண்டு, என்பதும், பதினொரு தொகுதிகளையுடையது என்பதும் காப்புச் செய்யுளால் அறியக்கிடைக்கின்றது. ஆனால், காப்புச்செய்யுளில் கூறிய ஆசிரிய நிகண்டு எனும் பாயிரத்துள் காணப்படவில்லை.

## சுவடி வரலாறு

ஆசிரிய நிகண்டு எனும் பெயருடைய ஏட்டுச்சுவடி, எமது சரசுவதி மகால் 919ஆம் எண்ணினைத் தாங்கியது. இச்சுவடி, முதலிரண்டு தொகுதிகளைக் கொண்டது. எஞ்சிய தொகுதிகளுக்காக முயன்றபோது, சென்னை, மகாமகோ பாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள்

1. முதற்பகுதி முன்னுரையில் காண்க.

நூல்நிலையத்தில், தொடர் எண். 345 என்ற சுவடியும், தொடர் எண். 941 என்ற சுவடியும் இருப்பதறிந்து அவற்றின் படிகளைப் பெற்றோம்.

அவற்றின் தொகுதிகள் எட்டு மட்டுமே கிடைத்தன. அவற்றை, பிற நிகண்டுகளின் ஒப்புமைகளுடன் என்னால் 1975ம் ஆண்டு எமது சரசுவதி மகால் வெளியீடு எண் 156 ஆக வெளியிடப்பட்டது.

பதினோரு தொகுதிகளைக் கொண்ட ஆசிரிய நிகண்டு, எட்டு தொகுதிகளோடு மட்டும் வெளிவந்தது எனக்கு மன அமைதியைத் தரவில்லை. அதுமுதற்கொண்டு எஞ்சிய மூன்று தொகுதிகட்காக முயற்சித்து வந்தேன். இறையருள் துணை செய்ய, முயற்சி பலித்தது.

பேரூராதீனம், தவத்திரு சாந்தலிங்க அடிகளார் மடாலயத்தில், ஆசிரிய நிகண்டு முழுமையும் இருக்கிறது எனக் கேள்வியுற்று, பேரூர் சென்று, தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் அனுமதி பெற்று, சுவடியினின்று 9, 10, 11 ஆகிய தொகுதிகளின் பாடல்களை எழுதிக்கொண்டு வந்தேன். அவற்றை வெளியிடும் வாய்ப்பினை எதிர் நோக்கியிருந்தேன்.

பின்னர், மீண்டும் பேரூராதீனம் செல்ல வேண்டிய வாய்ப்பு ஏற்பட்டபோது, அங்கு, போளுவாம்பட்டி, திருவாளர் வித்துவான் ஐ. இராமசாமி அவர்களிடம் இந்நூல் பற்றி உரையாடும்போது, அவர்கள், என்னிடம் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ரீடர், தமிழ்ப் பேரறிஞர் திரு. S.வையாபுரிப்பிள்ளை அவர்களுடைய கையெழுத்து காகிதச் சுவடி ஒன்று இரண்டு பகுதிகளாக இருக்கிறது. அது வையாபுரிப்பிள்ளை அவர்கள், பண்டித அ. கந்தசாமிப் பிள்ளை அவர்களிடம் கொடுத்தது. அவர், கையொப்பமிட்ட, 25-1-1938 தேதியிட்ட கடிதமும் அத்துடன் இருக்கிறது.

பண்டித கந்தசாமிப்பிள்ளை அவர்கள், எனது ஆசிரியர். அவர், அதனை என்னிடம் தந்தார். தற்போது நீங்கள் வெளியிடுவதாயின் அதனைத் தருகிறேன் என்றார்.

உடன், அவருடன் போளுவாம் பட்டி என்ற ஊரை அடைந்து, அவரிடம், அதனையும் மற்றும் ஒரு காகிதச் சுவடியினையும் பெற்றுக்கொண்டு வந்தேன். அது எமது மகாலுக்கு 23-9-1984ல் வந்து சேர்ந்தது.

### திரு. வையாபுரிப்பிள்ளை காகிதச்சுவடி

இவரது ஆசிரிய நிகண்டு ஒன்று முதல் மூன்று தொகுதிகள் வரை 6-4-1930-ம் தேதி எழுதப்பட்டது. ஒரு பகுதியாகவும், நான்கு முதல் பதினோறு தொகுதி வரை ஒரு பகுதியாகவும் உள்ளது. இவ்விரண்டு பகுதிகளும் எமது காகிதத் தமிழ்ச்சுவடி வரிசையில் 8, 9-ம் எண்களுடன் பதிவாகியுள்ளன.

### திரு. வையாபுரிப்பிள்ளை அவர்களின் கடிதம்

(தட்டச்சு செய்தது)

S. Vaiyapuri Pillai, B.A.B.L.,
Reader in Tamil
University of Madras

Laksmi sadan
4, Chitrakulam Square
Mylapore, Madras.
25th January, 1938

Dear Sir,

I am sending you here with by Registered Book-post the manuscript copy of Aciriya Nigandu. Many thanks.

Please acknowledge receipt of the same.

Yours sincerely,
(Sd.) S. Vaiyapuri pillai

To
M.R.Ry. A. Kandasamy pillai Avl.
Tamil Lecturer, Govt. Arts College,
Coimbatore.

இக்கடிதம், எமது மகால் தமிழ் காகிதச்சுவடி எண். 8-ல் இருக்கிறது.

## பதிப்பு

திருவாளர், வித்துவான் ஐ. இராமசாமி அவர்களிடமிருந்து பெற்ற, திருவாளர் வையாபுரிப் பிள்ளை அவர்களின் கையெழுத்துப் பிரதியையே மையமாகக் கொண்டும், பேரூர் சுவடி, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடி ஆகியவைகளைத் துணையாகக் கொண்டும் இந்நூல் பதிப்பிக்கப்பட்டது.

திரு. வையாபுரிப்பிள்ளை சுவடியிலும், பேரூர் சுவடியிலும், 11-வது தொகுதியில் இரண்டிரண்டு செய்யுட்களே காணப்படுகின்றன. தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடியில் 11-வது தொகுதியில் 4 பாடல்கள் காணப்பட்டன.

எனவே, வையாபுரிப்பிள்ளை சுவடியின் இரண்டு பாடல்களோடு, தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடியில் காணப்பட்ட மிகுதிப் பாடல்கள் இரண்டையும் சேர்த்து ஒப்புமைகளுடன் வெளியிடப்பட்டுள்ளது.

## சொற்கள்

இம்மூன்று சுவடிகளிலும் சொற்கள், இடம் மாறுபட்டும், பெயர்த்தெழுதுவோரால் விடுபட்டும், பிழைபட்டும், உருமாறியும் காணப்படுகின்றன. ஒருவாறு செப்பம் செய்து தரப்பட்டுள்ளது. கடைசித் தொகுதியில் உள்ள, கடைசி இரண்டு பாடல்களில் சொற்கள் விளங்காமல் உள்ளன. எனவே, அவற்றை சரிப்படுத்தவும், ஒப்புமை தரவும் இயலாது போயிற்று. தெளிவான சுவடி ஒன்று கிடைக்குமாயின் இவற்றைச் சரிசெய்துவிடலாம்.

## பின்னிணைப்பு

இவ்விரண்டாம் பகுதியில் மூன்று தொகுதிகளில் மொத்தம் 11 பாடல்களே இருப்பினும் இவற்றில், வரி மிகுந்தும், சீர்கள் குறைந்தும் காணப்படுகின்றன.

எமது மகால் காகிதக் கையெழுத்துச் சுவடியினை மையமாக வைத்து பே[illegible]நர்ச் சுவடியின் பாடவேறுபாடுகள் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன. பாடவேறுபாடுகள் மிக அதிகமாக உள்ளவனவால், தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடியின் பாடல்கள் நான்கும் முழுமையாகப் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன.

### தொகுதிகள்

இதில் அடங்கியுள்ள தொகுதிகள்:- 9-வது செயல் பற்றிய பெயர்த்தொகுதி. இது, மூன்று செய்யுட்களைக் கொண்டது. 10-வது ஒலி பற்றிய பெயர்த்தொகுதி. இதில் நான்கு செய்யுட்கள் உள்ளன. 11-வது ஒருசொல் பல பொருள் தொகுதி. இதுவும் நான்கு செய்யுட்களைக் கொண்டது.

### ஒப்புமைகள்

ஆசிரிய நிகண்டில் உள்ள சொற்களுக்கு ஒப்புமை தரும்போது, இப்பகுதிக்கு மிகுந்த இடர்ப்பாடுகள் ஏற்பட்டன. ஆயினும் கூடிய மட்டில் ஒப்புமைகள் காட்டப்பட்டுள்ளன. அறியாமையினால், ஒப்புமைகள் விடுபட்டும் இருக்கக்கூடும். மேலும் அச்சுப்பிரதிகள் திருத்தம் பெறும்போதும் சில தவறுகள் நேர்ந்திருக்கக் கூடும். கற்று வல்ல நல்லோர்கள் அவற்றைப் பொறுப்பதோடு, அவற்றைச் சுட்டிக் காட்டினும் திருத்தம் பெறும்.

### பாடவேறுபாடுகள்

ஆசிய நிகண்டு முதல் தொகுதியிலும் மூன்று சுவடிகளின் பாடவேறுபாடுகள் குறிப்பிட்டுக் காட்டப் பட்டுள்ளன. அதற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட சுவடிகள் மூன்று. இவ்விரண்டாம் பகுதிக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட சுவடிகளும் மூன்று. ஆயினும் முதல் மூன்று சுவடிகளினின்றும் இவை வேறுபட்டவை. இவை மூன்றும் முதல் பகுதி வெளியிடும் போது கிடைக்கவில்லை. இந்த

ஆறு சுவடிகளையும் பார்க்கும்போது, ஆறு சுவடிகளிலும் பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன.

## வேறுபாட்டுக் காரணங்கள்

முன்பெல்லாம், ஆசிரியர் சொல்ல மாணவர்கள் எழுத்தாணி கொண்டு பனை ஓலைகளில் எழுதினர். அவ்வாறு எழுதும்போது கவனக்குறைவால் தவறுகள் ஏற்படக்கூடும் அவற்றைப் படியெடுப்போர் பெயர்த்தெழுதும்போது பிழைகள் ஏற்படலாம். நூல் ஆசிரியரே எழுதிய மூலச்சுவடியினைப் பார்த்துப் படியெடுப்போர், எடுத்தெழுதும்போதும் வேறுபாடுகள் ஏற்பட்டிருக்கும். தற்போதைய அச்சுப்பிழைகள் போல இவை நிகழக் கூடியவை. அதுவன்றி கற்றவர்கள் கூட தங்கள் கருத்துக் கேற்ப எழுதி வைத்திருக்கலாம் என்று நினைக்க இடமிருக்கிறது. இந்த ஆறு சுவடிகளிலிருக்கும் பாட வேறுபாடுகளைத் தொகுத்தால் அதுவே ஒரு நூலாக அமையும்.

## பதிப்புச் சிறப்பு

ஆசிரிய நிகண்டு நூலை, முதல் 8 தொகுதிகளை ஒப்புமைகளுடன் முதற்பகுதியாகவும், எஞ்சிய 3 தொகுதி களை ஒப்புமைகளுடன் இரண்டாம் பகுதியாகவும் பதிப்பித்து நிறைவு செய்துள்ளேன். இதில், ஆசிரிய நிகண்டு, திவாகரம், பிங்கலத்தை, சூடாமணி, கயாதரம் ஆகிய ஐந்து நூல்களும் இடம்பெற்றுள்ளன. இவற்றைப் பெற்றுப் பயனடைவோர், இவ்வைந்து நூல்களையும் தனித்தனியே விலைகொடுத்து வாங்காமல், எமது பதிப்பினைப் பெறுவதன் மூலம் பொருள் மீதத்தையும், ஒப்புமை நூல்களைத் தனித்தனியே எடுத்துப் பார்க்கும் அதிக நேரம் ஆகாமல், ஒரே நூலில் அடுத்தடுத்துப் பார்ப்பதன் மூலம் நேரம் மிச்சத்தையும் அடைவர்.

## நன்றி

முதலில் இந்நூலைத் தேடி கோவை மாவட்டம், பேரூர் சென்று, ஆதீனத்தை அணுகிக் கேட்டபோது, இன்முகத் தோடும், மகிழ்ச்சியோடும், ஆசிரிய நிகண்டுச் சுவடியினைப் படியெடுக்க அனுமதி தந்து, வேண்டிய வசதிகளையும் செய்து தந்த ஆதீன குருமகா சந்நிதானம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கட்கு எனது பணிவன்பான வணக்கத்தோடு கூடிய நன்றி உரித்தாகிறது.

அடுத்து, முன்பின் தெரியாமல், எதிர்பாராமல் சந்தித்த போது, உவப்புடன், தம்மிடம், ஆசிரிய நிகண்டு கையெழுத்துப்பிரதி இருக்கிறது; அதனை சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகவே தருகிறேன் என்று கூறி, தமது ஊரான போளுவாம்பட்டிக்கு அழைத்துச் சென்று உபசரித்து நூல்களையும் தந்து அதன் சிறப்பியல்பான தமிழ்ப் பேரறிஞர் திருவாளர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களுடையது என்பதனையும், அதனை, தனது ஆசிரியர் தனக்குத் தந்தார் என்பதனையும் கூறி வழியனுப்பி வைத்த போளுவாம்பட்டி திருவாளர் வித்துவான் ஐ. இராமசாமி அவர்கட்கு எனது இதயங்கலந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பின்னர், தம்மிடமுள்ள சுவடியினைப் படியெடுத்துக் கொள்ள அனுமதியளித்த தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் மாண்புமிகு வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கட்கும், சுவடி கொடுத்து உதவி செய்த ஷெ பல்கலைக் கழக ஓலைச்சுவடித் துறைத்தலைவர் திருவாளர் வித்துவான் மு. சண்முகம்பிள்ளை அவர்கட்கும் எனது மனமுவந்த நன்றியினைக் கூறிக்கொள்கிறேன்.

எல்லோரும் எளிதில் கற்றுணரும் பண்புகொண்ட இவ்வாசிரிய நிகண்டின் இரண்டாம் பகுதியினைப் பதிப்பிக்க அனுமதியளித்த, எமது மகால் முன்னாள் இயக்குநரும், மாவட்ட ஆட்சியருமான திருவாளர் து.இரா.இராமசாமி,இ.ஆ.ப., அவர்கட்கும், தற்போதைய இயக்குநரும் மாவட்ட ஆட்சியருமான திருவாளர்

மா. இராமு, இ.ஆ.ப., அவர்கட்கும், இந்நூலக நிருவாக அதிகாரி பொறுப்பு, திருவாளர் அ. பஞ்சநாதன், எம்.ஏ. பி.லிப்சி அவர்கட்கும், இதனை வெளியிடப் பொருளுதவி செய்த நடுவண் அரசுக்கும், நன்முறையில் விரைவில் அச்சிட்டுத் தந்த அச்சகத்தாருக்கும் எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இதிற்காணும் குற்றங்களை குணம்பொருந்தி வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன்.

இந்நூல் மேலும் சிறப்புடன் அமைய விரும்பும் மேன்மக்கள், தங்கள் தங்களிடமுள்ள ஆசிரிய நிகண்டுச் சுவடிகளை எமது மகாலுக்குத் தந்து துணைபுரிவார்களாயின் நற்பயனும், நன்மக்களின் பெருவாழ்த்தும் பெறுவர்.

பொதுவாக, ஓலைச்சுவடிகளைத் தங்களிடம், முன்னோர்கள் சொத்து என்று பாதுகாத்து வைத்திருக்கும் பெருமக்கள், அவை எந்த மொழியாயினும், அவற்றை எமது சரசுவதி மகாலுக்குத் தந்துதவினால், அந்நூல்களால் பலரும் பயனடையும் புண்ணியத்தை அடைவதோடு அந்நூல் அச்சேறி வெளிவந்தவுடன் அந்நூலில் 5 படிகளையும் பெறுவர். அவைகள் அழிந்தொழியவிடாமல், அவற்றைப் பயன்படச்செய்ய உதவினால் மேன்மக்களின் வாழ்த்தினையும், புகழையும் அடைவர். எனவே, ஓலைச் சுவடிகளை அழியவிடாமல் எம்மிடம் தந்துதவ வேண்டுகிறேன்.

என் மனதிலிருந்த குறைபாடு நீக்கி, இதன் இரண்டாம் பகுதி வெளிவரப் பல்லாற்றானும் தோன்றாய்த் துணையாய் இருந்து அருள்புரிந்த எம்மன்னை தமிழன்னை எல்லோருக்கும் அருள்புரிவாளாக.

இங்ஙனம்,

புலவர். **வீ. சொக்கலிங்கம்,**
தமிழ்த்துறை (ஓய்வு),
**சரசுவதி மகால் நூலகம்..**

தஞ்சாவூர்,
17-5-87.

# பாடற் முதற்குறிப்பு அகரமுதலி



## தொகுதிகள்

# பெயர் முதற்குறிப்பு

# ஆசிரிய நிகண்டு

## இரண்டாவது பகுதி

### ஒன்பதாவது (செயல் பற்றிய பெயர்த்) தொகுதி

**அரசிறை, சுங்கம், குடியிறை, கொள்ளை, சிரிப்பு, அவமதிச் சிரிப்பு, மவுனம், விடுத்தல் ஆகியவற்றின் பெயர்**

திறைமாழை பாகுடன் குரைகப்ப மைந்துமே
செறுமர சிறையின்பெயர்
செப்பரிய வுல்குவுரை யாயமே சாரிகை
தெரிந்திடுஞ் சுங்கப்பெயர்
கறைவரி யிறுப்புக் கரங்கடமை யைந்துடன்
கடனுமே குடியிறைப்பேர்
காணரிய குறைகொண்டி சூறையும் வள்ளையுங்
கருதிடுங் கொள்ளைப்பெயர்
முறுவலிளி யாசம்நகை யார்ப்புடன் மூரலும்
மொழியுமறி வொடுசிரித்தல்
முற்றுவசி[1] யேயவ மதித்திடுஞ் சிரிப்பாகு
மூகமும் மோனமுடனே
நிறைகொண் மௌனப்பெயர் மோக்கமோ சனமுடன்
நித்தலே தீர்தலொறுவல்
நீங்கலிவை யாறுமே விடுத்தலின் பெயரென
நிகழ்த்தினர் தமிழ்ப்புலவரே! (1)

*(பதம் பிரித்தது)*

நிறை, மாழை, பாகு உடன், குரை, கப்பம் ஐந்துமே
செறும் அரசிறையின் பெயர்
செப்ப அரிய உல்கு, உரை, ஆயம்ஏ, சாரிகை
தெரிந்திடும் சுங்கப் பெயர்

---

1. முற்றுமசி எனல் பொருந்தும்.

கறை, வரி, இறுப்பு, கரம், கடமை ஐந்துடன்
கடன் உம் ஏ குடியிறைப் பேர்
காண அரிய குறை, கொண்டி, சூறை - உம், வள்ளை-உம்
கருதிடும் கொள்ளைப் பெயர்
முறுவல், இளி, ஆசம், நகை, ஆர்ப்பு - உடன், மூரல்-உம்,
மொழியும் அறிவொடு சிரித்தல்
முற்றும் அசி-ஏ அவமதித்திடுஞ் சிரிப்பு ஆகும்
மூகம் - உம், மோனம் - உடனே
நிறைகொள் மௌனப் பெயர் - மோக்கம், மோசனம் உடன்
நீத்தல் - ஏ, தீர்தல், ஒறுவல்
நீங்கல் இவை ஆறுமே விடுத்தலின் பெயர் -என
நிகழ்த்தினர் தமிழ்ப் புலவரே. (1)

## ஒப்புமைகளுடன்

### அரசிறைப் பெயர்

**ஆசிரிய நிகண்டு**:- திறை, மாறை, பாகு, குரை, கப்பம்

**சேந்தன் திவாகரம்**:- அரசிறை, திறை, கப்பம், இறை.

**பிங்கல நிகண்டு**:- இறை, பிறங்கு, வரி, பொறி, வரை.

**சூடாமணி நிகண்டு**:- அரசிறை, திறை, மிறை, கப்பம், பாகுடம்.

**கயாதர நிகண்டு**:- அரசரிறை, திறை.

### சுங்கத்தின் பெயர்

**ஆசிரிய நிகண்டு**:- உல்கு, உரை, ஆயம், சாரிகை.

**சேந்தன் திவாகரம்**:- சுங்கவிறை, உல்கு, சுங்கம்.

**பிங்கல நிகண்டு**:- சுங்க இறை, உல்கு, சாரிகை.

**சூடாமணி நிகண்டு:**- சுங்கவிறை, உல்கு, ஆயம், சாரிகை.

**கயாதர நிகண்டு:**- உல்குபொருள், சுங்கம்.

## குடியிறையின் பெயர்

**ஆசிரிய நிகண்டு:**- கறை, வரி, இறுப்பு, கரம், கடமை, கடன்.

**சேந்தன் திவாகரம்:**- குடியிறை, கரம், கடன், கறை, இருப்பு, வரி.

**பிங்கல நிகண்டு:**- குடியிறை, கறை, வரி, ஆயம், கடன்,சுரம், இறுப்பு.

**சூடாமணி நிகண்டு:**- குடியிறை, கறை, கடன், வரி, இறுப்பு, கரம்.

**கயாதர நிகண்டு:**- கறை, கரம், கடன், குடியிறை.

## கொள்ளையின் பெயர்

**ஆ :**- குரை, கொண்டி, சூறை, வள்ளை.

**சே:**- கொண்டி, சூறை, கொள்ளை

**பி:**- கொள்ளை, சூறை, கொண்டி.

**சூ:**- சூறை, கொண்டி, கொள்ளை

**க:**- (கயவு, கரவடம், கள்ளம், கபடம், கிருத்திமம், சோர்வு, களவு)

## சிரிப்பின் பெயர்

**ஆ:**- முறுவல், கிளி, ஆசம், நகை, ஆர்ப்பு, மூரல்.

**சே:**-

**பி**:- சிரிப்பு, மூரல், இளி, முறுவல், நகை, ஆசம், நுகர்தல், துவ்வல், துய்த்தல், துற்றல், துறுவல், ஆர்தல், மாந்தல், கைதொடல்.

**சூ**:- சிரித்தல், முறுவல், நகை, ஆர்ப்பு, மூரல், இளி, ஆசம்.

**க**:-

## அவமதிச்சிரிப்பின் பெயர்

**ஆ**:- அசி
**சே**:- அசி
**பி**:-
**சூ**:- அசி
**க**:-

## மௌனத்தின் பெயர்

**ஆ** :- மூகம், மோனம்.
**சே** :-
**பி** :-
**சூ** :- மூகம், மோனம், வாளா, கேளா.
**க** :-

## விடு (த்) தலின் பெயர்

**ஆ** :- மோக்கம், மோசனம், நீத்தல், தீர்தல், ஒறுவல், நீங்கல்.

**சே** :- விடுதல், தீர்தல், தீர்த்தல், விடல், விடுதல், வியோகம், மோசம், மோக்கம், வீதல்.

**பி** :- விடுதல், உயிர்த்தல்.

**சூ**:- விடுதல், உயிர்த்தல், விடுத்தல், மோசனம், மோக்கம், வீதம், தீர்தல்.

**க** :-

**உண்ணல் பெயர், குடித்தல் பெயர், கடித்தல் பெயர், விழுங்கல் பெயர், கொப்பளித்தல் பெயர்.**

அருந்தல்பா ரணநுகர்தல் மிசைதல்கை தொட்ட
லமுதுசெய் திடல்பகித்தல்
மாந்தலயி றல்லார்தல் புசித்தலுட னேதுய்த்தல்
மன்னுபோ சனந்துவாரல்
பரிந்திடுந் துற்றலுடன் தின்றலுண் ணற்பெயர்
பதினேழு பருகல்மாந்தல்
பானமிம் மூன்றுமே குடித்தலின் பெயராம்
பழுதில்சு வைத்தலொலித்தல்
உரிஞ்சுதல் சூப்புதல் வருந்திக் கரித்தலுங்
கொரித்தலிரு வகையுமுடனே
வைக்குங்க டித்தற்பெயர் கிராசமெனுங் கலெற்றிட லென
வழங்கும்வி ழுங்கற்பெயர்
உரம்பெறு தெவிட்டல் கான்றலுற் காரமு
முமிழ்தல்விம் முதல்கக்கலும்
ஓங்கிபல காற்கக்கல் காலலும் பில்கலுடன்
கொப்பளித்தலே பிளிற்றலாமே. (2)

*(பதம் பிரித்தது)*

அருந்தல், பாரணம், நுகர்தல், மிசைதல், கைதொட்டல்
அமுதுசெய்திடல், பகித்தல்
மாந்தல், அயிறல் ஆர்தல், புசித்தல் -உடனே, துய்த்தல்
மன்னு போசனம், துவரால்,
பரிந்திடும் துற்றல்-உடன், தின்றல், உண்ணல் பெயர்
பதினேழு-பருகல், மாந்தல்,
பானம் இம் மூன்றுமே குடித்தலின் பெயர்ஆம்.
பழுதுஇல் சுவைத்தல் ஒலித்தல்
உரிஞ்சுதல், சூப்புதல், வருந்தி கரித்தலும்,
கொரித்தல் இருவகையும் உடனே
வைக்கும்கடித்தல் பெயர், கிராசம் எனும் கலெற்றிடல் என
வழங்கும் விழுங்கல் பெயர்.

உரம்பெறு தெவிட்டடல், கான்றல், உற்காரம்,
உமிழ்தல் விம்முதல் கக்கல் - உம்
ஓங்கி பலகால் கக்கல், காலல்-உம் பில்கல் உடன்
கொப்பளித்தலே பிளிற்றல் ஆம்.

## ஒப்புமைகள்

### உண்ணல் பெயர்

**ஆ** :- அருந்தல், பாரணம், நுகர்தல், மிசைதல், கை தொட்டடல், அமுது செய்திடல், பகித்தல், மாந்தல், அயிறல், ஆர்தல், புசித்தல், துய்த்தல், போசனம், துவாரல், துற்றல், தின்றல்.

**சே** :- அயிறல், மிசைதல், கைதொட்டடல், வாரணம், துய்த்தல்,அருந்தல், ஆர்தல், துவ்வுதல், உற்றல், நுகர்தல், மாந்தல், உண்டல், தின்னல், பருகுதல்.

**பி** :- அயிறல், மிசைதல், அருந்துதல், நுகர்தல், துவ்வல், துய்த்தல், துறுவல், ஆர்தல், மாந்தல், கைதொடல், பானகம், போனகம்.

**சூ** :- அருந்திடல், துய்த்தல், மாந்தல், அயிறல், அமுது செய்தல், கைதொட்டடல், புசித்தல், போசனம், ஆர்தல், நுகர்தல், தின்றல், பாரணம், மிசைதல், துற்றல்.

**க** :- உண்டல், நுங்கல், துப்பு, நுகர்தல், மிசைதல், பொசித்தல், அசித்தல், துய்த்தல், வைப்புணல், கைதொடல், ஆர்தல், அருந்துதல், மாந்தல், துவ்வு, அயிறல், பாரணம்.

### குடித்தல் பெயர்

**ஆ** :- பருகல், மாந்தல், பானம்.
**சே** :-
**பி** :- குடித்தல், பருகல், மாந்தல், பானம்.
**சூ** :-
**க** :-

## கடித்தல் பெயர்

**ஆ** :- சுவைத்தல், ஒலித்தல், உரிஞ்சுதல், சூப்புதல், கரித்தல், கொரித்தல்.

**சே** :-

**பி** :-

**சூ** :-

**க** :-

## விழுங்கல் பெயர்

**ஆ** :- கிராசம் எனும் கலெற்றிடல்.

**சே** :-

**சூ** :- நுங்கல், நுகர்தல், விழுங்கல்.

**பி** :- தொண்டல், நுங்கல், விழுங்கல்.

**க** :-

## கொப்பளித்தல் பெயர்

**ஆ**:- தெவிட்டல், கான்றல், உற்காரம், உமிழ்தல், விம்முதல், கக்கல், காலல், பில்கல், கொப்பளித்தல், பிளிற்றல்.

**சே** :-

**பி** :-

**சூ**:- பிளிற்றல், பில்கல், காலல், உமிழ்தல், கொப்பளித்தல்,

**க** :-

## போரின் பெயர்,சாதலின் பெயர்

பொருதல்முனை சமர்முர ணாகவந் தும்பைமறல்
பூசல்சலி கஞ்சலிகி
பொருசம ருடன்றல்சங் கிராமமடல் காளபம்
புகல்யுத்த மாயோ தனம்

செருவினை குறும்பிரணம் ஞாட்புநோ தரசமதி
தெவ்வுதாக் குடனுற்றலும்
சினவலே எதுத்தலிகல் வெஞ்சம மாரங்கம்
திறல்மொய்யார்ப் புடன்மலைப்பு
விரயுமல் லேமலைதல் முப்பத்து ஒன்பதும்
விளம்பிடும் போரின்பெயர்
வீடல்விளி தல்வீய்தல் விதற்படுத லில்லெனல்
வீழ்தல்முடி தற்சமாதி
மரணமொழி தல்துஞ்சல் மாய்தலுடன் தபுதலே
மாளலுந் தவறல்பொன்றல்
கருப்படு வியோகமும் கழிவுட னிறத்தலே
காணரிய மூசல்முஞ்சல்
விருத்தலுடன்[1] மாண்டலிவை சாதலா மென்னவே
விளம்பினர் தமிட்புலவரே! (3)

## (பதம் பிரித்தது)

பொருதல், முனை, சமர், முரண், ஆகவம், தும்பை, மறல்,
பூசல், சலிகம், சலீகி
பொருசமர் உடன்றல், சங்கிராமம், அடல், காளபம்,
புகல்யுத்தம், ஆயோதனம்,
செரு, வினை, குறும்பு, இரணம், ஞாட்பு, நோதல், சமதி,
தெவ்வு, தாக்கு, உடனுற்றல், உம்
சினவல், எதுத்தல், இகல், வெஞ்சமம், ஆரங்கம்,
திறல், மொய், ஆர்ப்பு-உடன், மலைப்பு,
விரயுமல் - ஏ, மலைதல் முப்பத்து ஒன்பதும்
விளம்பிடும் போரின் பெயர்
வீடல், விளிதல், வீய்தல், விதற்படுதல், இல்-எனல்,
வீழ்தல், முடிதல், சமாதி,
மரணம், ஒழிதல், துஞ்சல், மாய்தல்-உடன், தபுதல் - ஏ,
மாளல்-உம், தவறல், பொன்றல்,
கருப்படு, வியோகம்-உம் கழிவு-உடன், இறத்தல்-ஏ,
காண அரிய மூசல், முஞ்சல்,
விருத்தல்-உடன் மாண்டல், இவை சாதல் ஆம் என்னவே
விளம்பினர், தமிழ்ப் புலவரே. (3)

---

1. வரிமிகையாயுளது.

## ஒப்புமைகள்

### போரின் பெயர்

**ஆ** :- பொருதல், முனை, சமர், முரண், ஆகவம், தும்பை, மறல், பூசல், சலிகம், சலீகி, பொருசமர், உடன்றல், சங்கிராமம், அடல், காளபம், யுத்தம், ஆயாதனம், செருவினை, குறும்பு, இரணம், ஞாட்பு, நோதல், சமதி, தெவ்வு, தாக்கு, உடனுற்றல், சினவல், எதுத்தல், இகல், வெஞ்சமம், ஆரங்கம், திறல், மொய், ஆர்ப்பு, மலைப்பு, மல், மலைதல்.

**சே**:- உறழ்வு, வெஞ்சம், மொய், செரு, ஞாட்பு, இரணம், தாக்கு, இகல், ஆயோதநம், அமர், போர், உடன்றல், ஆர்ப்பு, நிகர்ப்பு, மலைதல், நேர்தல், குறு, போயுடலுதல், ஆகவம், மண்டலம், தெவ்வு, வினையாடல், திறன், மறன், மர, முறண், சினம், சாகம், ஈரம், ஆர்த்தல், சங்கிராமம், தும்பை, கூட்டம், பூசல்.

**பி**:- யுத்தம், ஆகவம், தும்பை, சமரம், கணையம், செரு, சங்கிராமம், இகல், எதிர், ஞாட்பு, பூசல், ஆயோதனம், அடல், அமர், இரணம், மலைதல், போர்.

**சூ**:- போர், முரண், வினை, சமர், ஆர்ப்பு, மொய், தும்பை, ஞாட்பு, தாக்கு, செரு, மறல், காளபம், சினவல், அமர், மலைப்பு, இரணம், ஆகவம், நிகர்த்தல், இகல், சமம், உடன்றல், பொருதல், சங்கிராமம், தெவ்வு, பூசல், ஆயோதனம்.

**க**:- போர், வெம்முனை, மொய், அடல், ஞாட்பு, மலைதல், தெவ்வர், கொள்வினை, மாறு, முரண், சமர், நேர்தல், குறும்பு, இரணம், ஆர்ப்பு, நிகர்ப்பு, இகல், பூசல், செரு, உடற்றல், சமதி, ஆகவம், ஆயோதனம், சமம், சங்கிராமம், தும்பை, தாக்கல், எதிர்தல், சமீகம், அமர், கலிகல், எதிர்த்தல், ஆடல்.

## சாதலின் பெயர்

**ஆ**:- வீடல், விளிதல், வீய்தல்,விதற்படுதல், இல் எனல், வீழ்தல், முடித்தல், சமாதி, மரணம், ஒழிதல், துஞ்சல், மாய்தல், தபுதல், மாளல், தவறல், பொன்றல், கருப்படு, வியோகம், கழிவு, இறத்தல், முசல், முஞ்சல், விருத்தல், மாண்டல்.

**சே**:- சாதல், துஞ்சல், பொன்றல், விளிவல், வீதல், முஞ்சல், துவன்றல், முடிவு, உலத்தல், வீடல், மாய்தல், இறத்தல், மாளல், தபுதல்.

**பி**:- மரணம், அயர்ப்பு, மயக்கம், உயிர்சோர்தல், மயங்குதல், முஞ்சல், துவன்றல், முடிதல், விளிதல், துஞ்சல், தவறல், இறப்பு, பொன்றல், வீய்வு, உலப்பு, வீடல், மாய்தல், மாண்டல், மரித்தல், சாவு, இல்லெனல்.

**சூ**:- சாவு, துஞ்சல், வீடல், மாளல், விளிவு, வீவு, முஞ்சல், உலத்தல், பொன்றல், முடிதல், துவன்றல், மாய்தல், மரணம், வியோகம், இல்லெனல், கழிவு, இறத்தல், தபுதல்.

**க**:- வீடல், முடிதல், உலத்தல், இறத்தல், விளிதல், விடல்,வாடல், ஒழிதல், தபுதல், வறல், சாதல், மாய்தல், பொன்றல், அவிதல், மாள்தல், வீய்தல், படல், துஞ்சல், மடிதல்.

ஒன்பதாவது தொகுதி முற்றிற்று.



## பத்தாவது (ஒலிபற்றிய பெயர்த்) தொகுதி

### வேதம், வேதத்தினுட்பொருள், ஒன்றாம் வேதம், இரண்டாம் வேதம், மூன்றாம் வேதம், நான்காம் வேதம், வேத மார்க்கம்

ஆரணஞ் சுருதிமறை சாகையெழு தாக்கேள்வி
ஆதிநூல் பனிடமிருக்
கரையுமோத் துயர்வேதம் வேதத்தி னுட்பொரு
ளரியவுப னிடதமாகும்
சேருமொன் றாம்வேத மேபௌடி கத்துடன்
செப்பிடு மிருக்கெனும்பேர்
தெரியிரண் டாம்வேத மேதைத்தி ரியம்யசு(ர்)
திகழுமூன் றாம்வேதமே
ஏருலவு கீதநடை பெற்றிடுஞ் சாமமென்
றிசையும்நா லாம்வேதமே
யியம்புபெய ரதர்வண மெனலாகும் வைதிகம்
யிசைந்திடும் வேதமார்க்கம்
சார்வுபெறு மாகமம் தந்திர மாரிடம்
சமயஞ்சூத் திரம்பனுவலும்
வாருலவு மதிகாரம் கலையுடன் பிடகமென
வந்தவிவை நூற்பெயர்களே! (1)

### *(பதம் பிரித்தது)*

ஆரணம், சுருதி, மறை, சாகை, எழுதாக்கேள்வி
ஆதிநூல் பனிடம் இருக்கு
அரையும் ஓத்து உயர்வேதம், வேதத்தின் உட்பொருள்
அரிய உபநிடதம் ஆகும்
சேரும் ஒன்றாம் வேதமே பௌடிகத்துடன்
செப்பிடும் இருக்கு எனும் பேர்
தெரி இரண்டாம் வேதமே தைத்திரியம் யசுர்
திகழும் மூன்றாம் வேதமே

ஏர் உலவு கீதநடை பெற்றிடும் சாமம் என்று
இசையும், நாலாம் வேதமே
இயம்பும் பெயர் அதர்வணம் எனலாகும் வைதிகம்
இசைத்திடும் வேதமார்க்கம்
சார்வுபெறும் ஆகமம் தந்திரம் ஆரிடம்
சமயஞ் சூத்திரம் பனுவலும்
வார் உலவும் அதிகாரம் கலை - உடன் பிடகம் என
வந்த இவை நூல் பெயர்களே! *(1)*

**ஒப்புமைகள்**

**வேதத்தின் பெயர்**

**ஆ:**- ஆரணம், சுருதி, மறை, சாகை, எழுதாக்கேள்வி, ஆதிநூல், பனிடம், இருக்கு, ஓத்து.

**சே:**- ஆதிநூல், வேதநூல், எழுதாக் கேள்வி, மருதி, கறை, சாகை, இருக்கோத்தரணம்.

**பி:**- இருக்கு, சுருதி, மறை, எழுதாக்கிளவி, ஆதிநூல், சாகை, ஆரணம்.

**சூ:**- ஆதிநூல், எழுதாக் கேள்வி, ஆரணம், ஓத்து, சாகை, சுருதி, இருக்கு.

**க:**- எழுதாக்கேள்வி, சுருதி, மறை, சாகை, ஆதிநூல், உபநிடதம், ஆரணம், வேதம்.

**வேதத்தினுட்பொருள்**

**ஆ:**- உபநிடதம்.

**சே:**- உபநிடதம்.

**பி:**- உபநிடதம்.

**சூ:**- உபநிடதம்.

**க:**- உபநிடதம்.

